[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—POINT OF INFORMATION *RE* BUDGET OF THE STATE ELECTRICITY BOARD.

9-20 m. SRI R. SRINIVASA IYER: Mr. Speaker, Sir, we find that the Second Supplementary Financial Statement for the year 1957-58 of the Madras State Electricity Board has to-day been laid on the table of the House. Earlier, another statement regarding the Electricity Board was also placed on the table of the House. There was a request that the Electricity Demand and the Electricity Board may be discussed in the Assembly during the Budget discussions. I wish to know if the Members of the Assembly would have an opportunity of discussing the Budget for the Electricity Board.

MR. SPEAKER: If the hon. Member would come to my chamber and state his case, I shall consider.

## III.—CALLING ATTENTION TO THE FAILURE OF THE GOVERNMENT TO MAINTAIN SENDURAI-JAYANKONDAN ROAD IN TIRUCHIRAPPALLI DISTRICT IN PROPER REPAIR.

MR. SPEAKER: The hon. Member Sri K. R. Viswanathan has given notice of a motion calling the attention of the Government to a matter of urgent public importance under rule 40 of the Assembly Rules. I would request him to be brief in explaining his case. On a previous occasion he had taken more than ten minutes to explain his case.

SRI K. R. VISWANATHAN: கனம் தலைவர் அவர்களே, உடையார் பாளையம் தாலுகாவில் செந்துரை-ஜெயங்கொண்டான் சாலை தாலுகா தலைநகரத்தையும் செந்துரை ரெயில்வே நிலையத்தையும் இணைக்கிறது. இந்த சாலையின் நீளம் சுமார் 20 மைல். இந்த சாலையில் இரண்டு பஸ் சர்விஸ்கள் ஓடுகின்றன. இந்த சாலை மாவட்ட கழக நிர்வாகத்தில் இருந்தபொழுது, பல தடவை ஜில்லா இன்ஜினியருக்கு மகசர்களும் விண்ணப்பங்களும் அனுப்பியும், அதனுடைய பராமரிப்பை சரியானபடி கவனிக்காமல் இருந்தார்கள். 4, 5 ஆண்டுகள் ஆனபிறகு ஜெல்லி போட வேண்டுமென்று உத்திரவு வந்தது. அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் அந்த சாலையை சர்க்கார் எடுத்துக் கொள்வதாக முடிவு செய்தார்கள். ஆகையால் மாவட்ட கழகத்தார் அந்த சாலையைப் பராமரிக்கும் கடமையை மறந்தார்கள். ஜெல்லிகூட சேர்த்துவைத்தும் அதைப் பரப்புகிற கடமையை விட்டு, சர்க்காரே எடுத்துச் செய்து விடுவார்கள் என்று நினைத்து அதை அப்படியே விட்டு விட்டார்கள். அவர்களும் துரிதமாக அந்த பராமரிப்பு வேலையை எடுத்துக் கொள்ள முன்வந்தார்கள் இல்லை. இந்த நிலைமையில் இந்த சாலையில் ஓடிக்கொண்டிருந்த இரண்டு பஸ் சர்விஸ்களும் அதிலே செல்லும் பிரயாணிகளுக்கு தொல்லை விளைவித்து, நாள் தோறும் ஒரு பஸ் சர்விஸாவது ஆபத்துக்குள்ளாகாமல் இருக்கவில்லை என்ற நிலைமை இருக்கிறது. ஒரு பஸ் ஸெர்விஸ்தான் நிரந்தரமாக ஓடிக்கொண்டிருக்கிறது என்று சொல்லும் அளவிலே, ஒன்று ஆபத்துக்குள்ளாகியிருந்தால், அடுத்த நாளிலே அடுத்த பஸ் ஆபத்துக்குள்ளாகும். இம்மாதிரி நிலையில் பல விண்ணப்பங்கள்செய்தும் கூட அங்கு இருந்த ஜில்லா இன்ஜினியர் கவனிக்காமல் இருந்தார். 3–10–1957-ம் தேதியன்று ஒரு பஸ்ஸுக்கு கவிழக்கூடிய நிலையில் ஆபத்து நேர்ந்து, 4, 5 பிரயாணிகளுக்கு காயம் ஏற்பட்டது. இந்த சமாசாரத்தை கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வருவதுடன், உடனடியாக அந்த சாலையை பராமரிப்பு செய்யும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.